


# யிலைக் கொண்டுவாருங்கள்

வெயில் வந்துகொண்டிருக்கிறது. ஜன்னலைத் திறவுங்கள் என அவள் சொன்னபோது பின்னிரவின் பாதியே கடந்திருந்தது. தன்னிடம்தான் அதைச் சொல்கிறாளா அல்லது கனவில் நெருக்கம் கொள்ளும் ஏதோ உருவங்களோடு உரையாடிக் கொண்டிருக்கிறாளா எனத் தெரியாதபடி கம்பளிக்குள் சுருண்டிருந்தாள். புனித சேவியர் மருத்துவமனையின் செங்கல் சுவர்கள் கூட தனது இருப்பைக் காப்பாற்றிக்கொள்ள முடியாமல் நடுங்கிக்கொண்டிருந்தன. அந்த வார்டில் இருந்த பெண்கள் பலரும் விழித்தபடியேதான் படுக்கையில் கிடந்தனர் போலும். கண்களைத் திறக்காமலே அவர்கள் பனியைக் கண்டுகொண்டி ருந்தார்கள். குளிர்காலத்தில் இந்த நகரம் நோயாளிகளுக்கு மிகத் துயரமானது. கண்ணாடி ஜன்னல்களுக்கு வெளியே பனி தன்னிஷ்டம் போல நடமாடி அலைகிறது.

டிசம்பர் மாதத்தின் ஓய்வுநாளன்று விடிந்த பிறகும் நகரில் குளிரடங்கவில்லை. பாதி இருளும் வெளிச்சமும் கலந்த வீதிகள் கனவில் இருந்து வெளிப்பட்டு விட்டனவோ போலத் தோற்ற மளித்தன. பகலும் இரவும் புணர்ச்சி பிரியாத நிலைபோல் ஒரு மயக்கம் எங்கும் நீண்டுகொண்டிருந்தது. பனி மரங்களை, இரும்பு வாகனங்களைக் கூட நடுங்கச் செய்துகொண்டிருந்தது. இரும்பின் வாசனை கலந்ததொரு குளிர்மை வீசிய அடுக்குக் குடியிருப்பில் விழித்தபடியே படுக்கையில் கிடந்த சுபத்ரா கண்களைத் திறக்கவே மிகச் சிரமப்பட்டவளாக சுவாசக் கோளங்களில் பனி நிரம்பி வேதனையும், உதட்டின் நரம்புகளில் ஊசி முறிவு ஏற்றும் குளிர் மையும் தாளாது வெயிலைக் கொண்டுவாருங்கள். வெயிலைக் கொண்டுவாருங்கள் என முனங்கிக்கொண்டிருந்தாள். ஒரு தாவரத்தைப் போல அவள் உடல் முறுக்கவிழ்ந்து கிடந்தது.

அன்றைய நாள் நீண்ட தியான வெளியைப் போல நிசப்தமும் ஆழ்ந்த மயக்கமூட்டுவதுமாக இருந்தது. கம்பளியின் வெளியே தெரியும் அவளது பாதங்களைப் பார்த்தபடியே இருந்தான். மஞ்சள் படிந்த கால் வளைவுகளும் வெளிறிய பாதநிறமும் சிறுமியைப் போலவே தோன்றியது. நகரில் எங்காவது வெயில் வந்திருக்கக் கூடுமா என அவனாகவே கேட்டுக்கொண்டான்.

இருளின் நிறம் கலைந்திருக்கிறதேயன்றி அது விலகவில்லை. வீட்டின் ஜன்னல்கள், கதவுகள், மாடிப்படி இடுக்குகள் வரை யாவும் மூடப்பட்டுள்ளன. மனிதனைப் போலவே காற்று கதவைத் தட்டித் தட்டிச் செல்கிறது. சுபத்ராவின் சுவாசம் அறையில் தனியே சுடரென நடுங்கியபடி சீரற்று ஒலிக்கிறது. அவள் தனது கேசத்தால் முகத்தை மூடிக்கொண்டு விட்டாள். உறக்கமற்ற இரவில் அழுது ஓய்ந்த கண்கள் அசதியில் ஒடுங்கிய படி இருந்தன. தனது உதட்டைத் தானே கடித்திருந்திருக்கிறாள். ரத்தம் அவளது நாடியில் ஒரு மருவென உறைந்திருக்கிறது. அவன் சுபத்ராவின் தாடையடியில் கைகளைக் கொடுத்து வெம்மை தெரிகிறதா எனப் பார்த்தான். கூழாங்கற்களெனக் குளிர்மை. அவள் தன் பற்களைக் கட்டிக்கொண்டாள். உறங்கிக் கொண்டிருக்கிறாளா அல்லது விழித்திருக்கிறாளா என அறிய முடியாத ஒரு நிலையிலிருந்தாள். அவன் கட்டிலை விட்டு இறங்கி வந்து திரைகளை விலக்கி வீதியைப் பார்த்தான். புகையைப் போல் கலைந்து சுழன்றுகொண்டிருந்தது ஈரக்காற்று. அவள் ஏதேதோ பிதற்றம் கொள்ளத் தொடங்கினாள். அவன் நீண்ட யோசனைக்குப் பிறகு சேவியர் மருத்துவமனையின் ஆம்புலன்ஸுக்கு போன் செய்தான். அவள் சுவாசம் சிதறிக் கொண்டிருந்தது.

யாவும் பழகிப்போய்விட்டது. நோய் ஒரு மனநிலையை முற்றச் செய்துவிடுகிறது. அது உடலை மட்டும் சார்பு கொள்வதில்லை. கடந்த இரு வருடங்களாக சுபத்ரா பனிக்காலத்தின் வருகைக்கு முன்பாகவே தன்னைக் குளிர் கவ்விக்கொண்டு வதைக்கப் போகிறதானதொரு பயத்தை நெருங்கத் தொடங்குகிறாள். அது அவள் உடலின் உதிரத்தோடு சேர்ந்து ஓடத் தொடங்கி விடு கிறது. பகலிலும் கூட அவள் பனியின் நடமாட்டத்தைக் கண்டு விட்டவள் போல திடுக்கிடுகிறாள். இருபது வயதைக்கூடத் தாண்டாத அவளை இது போன்றதொரு குளிர்காலத்தின் முதல் வாரத்தில்தான் சில வருடங்களின் முன்பு சந்தித்தான். அப்போது அவள் காலை நேரங்களில் புகைமூட்டத்தின் நடுவே

மைதானங்களைக் கடந்து சைக்கிளில் போய்வரும் ஆசிரியையாக இருந்தாள். அவன் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு மேஜிக் செய்து காட்டும் மாயக் கலைஞனாகச் சுற்றியலைந்துகொண்டிருந்தான். சுபத்ராவை அவன் வேலை செய்த இளையோர் பள்ளியில் முதலாகப் பார்த்தான். அப்போது அவனிடம் ஒற்றைச் சக்கர சைக்கிள் ஒன்று இருந்தது. அதில் ஏறிக்கொண்டு பள்ளிக் கூட வளாகங்களில் அவன் சுற்றிவரும்போது முகம் தெரியாத சிரிப்பு ஒன்று அவனைத் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும். தனது பிராயத்தில் இருந்து மாயாஜாலத்தில் ஈடுபாடு கொண்டவனாகி, ஊர் ஊராகச் சுற்றத் தொடங்கிய நாளில் முதலாக அந்த ஒற்றைச் சக்கர சைக்கிளை அவனே உருவாக்கிக்கொண்டான். எளிய மாய வித்தைகளையே குழந்தைகளுக்குக் கற்றுத் தரவும் நடத்திக் காட்டவும் விருப்பமுடையவனாக இருந்தான்.

சுபத்ராவின் பள்ளிக்கூடத்துக்கு அவன் ஒரு மதிய உணவுக்குப் பிறகே சென்றிருந்தான். வகுப்பை மீறிய பிள்ளைகள் தொலைவில் மேஜிக் செய்யும் அவனையே பயத்தோடும், ஆர்வத்தோடும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவன் மூன்று மணி வரை காத்துக்கொண்டு இருக்க வேண்டியதாக இருந்தது. மிருதுவான குழந்தைகளின் கண்கள் அவனையே ஒரு மாயப் பொருளைப் போலக் கண்டுகொண்டிருந்தன. தன்னோடு கொண்டு வந்திருந்த இரண்டு புறாக்களைத் தடவியபடி அவன் தங்கநிற இலையொன்றைத் தனது கறுப்பு நிறத் தொப்பியில் அணிந்துகொண்டான். ஒரு சிறுமி இதை வெட்கம் கனியப் பார்த்துச் சிரித்தாள்.

அகன்று இலைகள் விரிந்த வாதா மரத்தடியில் அவன் தனது ஒற்றை சைக்கிளில் சாய்ந்தபடி வகுப்பறையின் சப்தத்தினைக் கேட்டுக்கொண்டிருந்தான். சுபத்ராவும் அவளது சக ஊழியர்களும் கூட அவனை ஆச்சரியத்துடன் பார்த்துச் சிரித்தபடிப் போனார்கள்.

வகுப்பறைகளை ஒன்றிணைத்திருந்தார்கள். பள்ளிக்கூடம் தடுப்புகளற்று இருந்தபோது பிரம்மாண்டமானதாகத் தெரிந்தது. முன்வரிசையில் இடித்துக்கொண்டு அமர்ந்திருக்கும் சிறுமிகளையும் கண்களால் தன்னைச் சுற்றி வரும் மாணவர்களையும் கண்டு சிரித்தபடி மாணவர்களில் ஒருவனைத் தனது உதவியாளனாக அழைத்தான். நடுங்கும் விரல்களை டவுசர் பையில் விட்டு மறைத்தபடி மேடைக்கு வந்த சிறுவனின் கண்கள், மெலிதான

பயத்தில் மின்னிக்கொண்டிருந்தன. மணலை இனிப்பாக மாற்றி யாவருக்கும் தந்தபடி தனது மாயக் குரலை உயர்த்தி யாவரையும் தன்மீதே கவனம் கொள்ளச் செய்தான்.

கூடடத்தில் இருந்த ஒரு சிறுமியை அழைத்து அவள் வயிற்றிலிருந்து கோழி முட்டையை எடுத்தபோது சிரிப்பலை எங்கும் பிரிந்தது. அந்தச் சிறுமி மிரட்சியுற்றவளாக தனது வயிற்றைத் தடவித் தடவிப் பார்த்தபடி தனது இருக்கைக்குத் திரும்பியிருந்தாள். யாரிடமிருந்தாவது ஒரு ரோஜாப்பூ வேண்டு மெனக் கேட்க, ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கொண்டபோது, சுபத்ரா தனது கூந்தலில் சொருகிய ஒற்றை ரோஜாவை எடுத்துத் தந்தாள். அந்த ரோஜாவை அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் போதே நிறத்தை மாற்றுவதாகச் சொல்லியவனாக, சிவப்பு நிற ரோஜாவை ஒரு சுழற்சியில் மஞ்சள் ரோஜாவாக்கினான். கைத்தட்டல் நிரம்பியது. அவன் திரும்பவும் ஒரு ரோஜாவை இரண்டு ரோஜாக்களாக்கி அவளிடமே திருப்பித் தந்தான். சுபத்ரா மிகுந்த வெட்கப்படுபவளாக இருந்தாள். நிகழ்ச்சி முடிந்து யாவரும் வெளிவந்த பிறகு சுபத்ரா அவன் அருகாமைக்கு வந்தவளாகச் சொன்னாள்,

'வெறும் கைகளால் உலகையே பறித்துவிடுவீர்கள் போலிருக் கிறதே, திரும்பவும் இங்கே வருவீர்களா?'

அவன் சிரித்துக்கொண்டான். சுபத்ராவின் பள்ளிக்கு அதன் பிறகு இன்று வரை நிகழ்ச்சி நடத்தத் திரும்ப அவன் போகவேயில்லை.

★★★

ஆம்புலன்ஸ் சப்தம் கேட்டபோது எதிர் வீட்டில் கதவைத் திறக்க முயற்சிக்கும் சப்தமும் யாரோ அதட்டும் குரலும் கேட்டன. மருத்துவமனைப் பணியாளன் மிக மெதுவாக சுபத்ராவை அழைத்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தான். பனி இன்னமும் கலையவில்லை. அவளது மாற்று உடைகள் மற்றும் கம்பளிகள் யாவையும் எடுத்துக்கொண்டு கீழே வந்தபோது வாகனங்கள் எதுவுமற்ற சாலையின் தொலைவில் மங்கிய வெளிச்சம் தெரிந்தது. ஆம்புலன்ஸ் படிகள் வெடித்திருந்தன. அவள் தனது தூக்கத்துக்குத் திரும்பிவிட்டவள் போலப் படுத்துக்கொண்டாள். வாகனம் மிக மெதுவாக சாலையில் சென்றுகொண்டிருந்தது. நகரமெங்கும் திரையிட்டது போலவொரு பனிப்படலம்.

விருட்சங்கள் தியானியைப் போலக் கிளைகளை ஒடுக்கி நின்றன. சாலையோரங்களில் இரு சிறுமிகள் பாலிதீன் பையினுள் சுருண்டு உறங்கிக்கொண்டிருந்தனர். வானம் தெளிவற்று இருந்தது. சுபத்ராவின் கனவில் பெரும் நெருப்புக் கோளமென சூரியன் வானை விட்டு இறங்கி தரை நோக்கி ஓடி வந்துகொண்டிருந்தது. அவள் தனது இரு கைகளாலும் அந்த அக்னிக் கோளத்தைப் பற்றி எடுத்து விழுங்கிவிட ஆசை கொண்டவளாக நாவை ருசிக்கத் தொடங்கினாள். மருத்துவமனையை நெருங்கும்போது கையில் இறந்துபோன குழந்தையுடன் ஒரு பெண் அழுது கத்தியபடி மருத்துவமனைக்குள் ஓடிக்கொண்டிருந்தாள். அவன் காலையில் இருந்து ஒரு பறவையைக் கூடக் காணவில்லை. அதன் சிறு சப்தம் கூடக் கேட்கவில்லை. பறவைகள் யாவும் எங்கு சென்று ஒடுங்கி விட்டதோ எனத் தெரியாத யோசனையுடன் இருந்தான். சுபத்ரா ஒரு வார்த்தையை உரக்கச் சொன்னாள்,

வெயில்...

★★★

தனது காதலின் முதல் பயணமாக சுபத்ராவை அழைத்துக் கொண்டு அவன் அருகாமையிலிருந்த ஒரு கடற்கரை நகருக்குச் சென்றிருந்தான். ஆழமற்ற நீலக்கடல். நீண்ட மணல்வெளியில் பலரும் ஈர உடலோடு கிடந்தார்கள். சுபத்ரா வெகு நேரம் கடலைப் பார்த்தபடி இருந்தாள். பிறகு அவனிடம் கேட்டாள்,

‘உங்கள் மாயத்தால் அந்த அலைகளைக் கரைக்கு வராமல் நிறுத்த முடியுமா?’

அவன் வேடிக்கையாகச் சொன்னான்,

‘முடியும், அலையைக் கடலை விட்டுத் தனியே பிரிக்க முடிந்தால்.’

அவள் தனது கேசத்தைச் சரியவிட்டபடி சொன்னாள்,

‘சில நிமிஷமானாலும் மாயம்தான் எத்தனை அழகாக இருக்கிறது இல்லையா?’

அவன் பதில் பேசவில்லை. சில மாதங்களில் அவர்கள் இருவரும் திருமணம் செய்துகொண்டார்கள்.

★★★

புனித சேவியர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட நான்காம் நாளில் அவள் சொஸ்தமடையத் தொடங்கினாள். நோயில் இருந்து எழுந்துவிட்டதும் அவள் பல நாள்கள் பேசாமலே இருப்பாள். அது நோய் அவளை விட்டு விலகியதற்கான அடையாளம். பகலில் அவள் மருத்துவமனையின் அகன்ற தூண்களை வெறித்தபடியிருப்பாள். எப்போதாவது வெந்நீரைப் பருகும்போது மட்டும் அவள் கண்கள் எதையோ நினைத்துக்கொண்டது போல் விசும்பும். இனி அவள் நலமடைந்துவிடுவாள். எனவே வீட்டுக்கு அழைத்துப் போகலாம் என்று மருத்துவர் சொல்லியிருந்தார். பனி குறையத் தொடங்கியிருந்ததோடு பகலில் மருத்துவமனையில் தங்குவதை அவள் மிகவும் வெறுப்பவளாக இருந்தாள் என்பதால் அவளை அழைத்துக்கொண்டு போய் விடலாம் என நினைத்தான். தேவையான மருத்துவச் செலவுகளுக்கு அவன் செலுத்திய பணத்தை விடவும் இன்னமும் சில நூறு ரூபாய்கள் தேவையானதாக இருந்தது. மாலைக்குள் தன்னிடமிருக்கும் மேஜிக் உடைகளையும் மாய உபகரணங்களையும் விற்றுவிடலாம் என முடிவு கொண்டவனாக மூசாவின் கடையைத் தேடிச் சென்றான்.

அந்தக் கடையினை அவன் கண்டுபிடித்த முதல் நாளில் அவனுக்குப் பன்னிரண்டு வயதே கடந்திருந்தது. அப்போது அக்கடை விந்தைகளின் காட்சியகமாக இருந்தது. மூசா சிறிய மர ஸ்டூலில் அமர்ந்தபடி எதையோ வாசித்துக்கொண்டிருப்பார். அவர் இருக்கையின் பின்புறத்தில் சிறியதும் பெரியதுமாக நிறைய மர இழுப்பு அறைகள் கொண்ட அமைப்பிருந்தது. அவரிடம் பொய்க் கபாலங்கள், தந்திரச் சீட்டுக்கட்டுகள், இரட்டை நிழல் காட்டும் கண்ணாடி, விதவிதமான தொப்பிகள் என யாவும் இருந்தன. அந்த மனிதர் எவரெவரிடமிருந்தோ இதைச் சேகரம் செய்திருக்க வேண்டும். தன்னிடமிருந்த பணம் முழுமைக்கும் அவன் மாயப் பொருள்களை சிறு வயதில் வாங்குவான். அச்சிடப்படாத வெண்ணிறச் சீட்டுக்கட்டுகள், தலைகீழ் உருவம் காட்டும் கண்ணாடி, இரண்டு பக்கமும் ஒரே உருவம் கொண்ட நாணயம், பாதரச மலர், ஒரு சிறிய மீன் வடிவ கத்தி என எடுத்து வந்து தந்தார். அதை எப்படிப் பிரயோகிக்க வேண்டுமென அவர் அவனுக்குச் செய்து காட்டினார். மூசாவுக்கும் மாயவித்தையின் மீது ருசியிருந்தது. அவரும் ஒரு மாஜிக் நிபுணராக வேலை செய்திருக்கக் கூடும். அவன் தன்னிடமிருக்கும் மேஜிக் பொருள்கள் யாவையும் அவரிடமிருந்தே

வாங்கியிருந்தான். அந்த வயதில் மேஜிக் காட்டுவது அவனுக்கு வானில் நடந்து திரிவது போன்றதொரு அனுபவமாகவே இருந்தது.

★★★

சுபத்ராவுக்கு எதுவும் மறந்திருக்கவில்லை. அவள் பார்த்துக் கொண்டிருந்த காலையில் வீட்டின் முன் நிறுத்தப்பட்ட சைக்கிளை மறையச் செய்து காட்டினான். சுபத்ராவால் நம்ப முடியவில்லை. சைக்கிளை அவள் பார்வையில் இருந்து புள்ளியாக மறைத்து, பின்பு மெல்ல சலனமாகி எதிரே தோன்றியதை ஒரு குழந்தையைப் போலக் குதூகலித்தாள். தன்னால் எதிரே நிற்கும் எதையும் மறைத்துவிட முடியுமென்றான். அவள் மிக ஆசையுடன் அவனைக் கட்டிக்கொண்டவளாகக் கேட்டாள்,

'மணிக்கூண்டைக் கூட மறைத்துவிட முடியுமோ..?'

அது ஆசையா அல்லது கேலியா எனப் புரியாமல் அதன் பிந்திய நாள்களில் அந்த மொகலாயர் கால மணிக்கூண்டுக்கு வருபவனாகிப் போனான். அந்த மணிக்கூண்டு இருபத்தெட்டு அடி உயரத்தில் சிவப்புக் கற்களால் கட்டப்பட்டிருந்தது. அதை மறையச் செய்வது எளிதானதல்ல. என்றாலும் அவனால் அதை மறையச் செய்து காட்ட முடியுமென்றவனாக அவன் அதன் அருகாமையில் இருக்கும் உயரங்களையும் அதன் இருப்பையும் பல்வேறு கால நேர நிலைகளில் அதன் தோற்றத்தையும் அவதானித்துக்கொண்டேயிருந்தான்.

ஒரு பொருளை மறையச் செய்ய எளிமையான வழி அதை விடப் பொய்த் திரையை ஏற்படுத்துவதென அவன் திட்டமிட்டுக் கொண்டு இருந்தபோது அதிகாலைப் பனி மணிக்கூண்டை மெதுவாக மறையச் செய்ததைக் கண்டான். தன்னால் இதுபோலவொரு பனிப்படலத்தை மட்டும் சிருஷ்டிக்க முடிந்தால் மணிக்கூண்டு எளிதில் மறைந்துவிடுமே என ஒரு நாளின் அதிகாலையில் தனது சூட்சுமத்தால் ஒரு நிமிஷம் அந்த மணிக் கூண்டை மறையச் செய்தபோது அதைப் பார்த்துக்கொண்டிருந்த இரண்டு பிச்சைக்காரர்கள் மட்டும் ஆரவாரம் செய்தனர். தன்னால் அதை மறையச் செய்ய முடியுமென அவன் பகிரங்கமாக நாளிதழ்களில் அறிவித்தான்.

அந்த நாளில் ஜனத்திரளின் முன்பாக நின்றுகொண்டிருந்தான். அவனும் சுபத்ராவும் அதிகாலையிலேயே மணிக்கூண்டுக்கு வந்து சேர்ந்திருந்தார்கள். கர்ப்பஸ்திரியாக இருந்ததால் அவள் நடப்பதற்குச் சிரமப்பட்டாள். ஆனாலும் நடக்கப் பிரியமான வளாகவே இருந்தாள். அவளை ஒருபுறம் பற்றிக்கொண்டபடி இருவரும் மெதுவாக மணிக்கூண்டை நோக்கி நடந்து போகும் வழியில் அவனது சாகசம் பற்றிய விளம்பரங்கள் சுவரில் ஒட்டப் பட்டிருந்தன. மணிக்கூண்டை மறையச் செய்யப் போகும் அவனது உருவமும் சுவரில் வெளிறியிருந்தது. சுபத்ராவை மணிக்கூண்டின் அருகே இருந்த பூங்காவில் இருந்த பெஞ்சில் உட்கார வைத்தவனாக அவன் மணிக்கூண்டின் பின்பக்கமாக எதையோ செய்தபடி இருந்தான். பொருள்கள் மறைந்துபோகும் மாயத்தில் ருசியுள்ள குழந்தைகளும் வயதானவர்களும் அதிகம் நிரம்பியிருந்தார்கள். அவன் மணிக்கூண்டின் எதிரே சிறிய மேடை போன்றதொரு அமைப்பில் நின்றவனாக, ஜனத்திரளை நோக்கி உற்சாகமாகப் பேசினான். சாகசத்துக்குப் பலரும் ஆரவாரம் செய்தார்கள். தொலைவில் சுபத்ரா ஒரு பெஞ்சில் கையில் உதிர்ந்த இலையொன்றை வைத்துக்கொண்டவளாக நிசப்தமாக அமர்ந்திருந்தாள்.

அவன் தனது கவனத்தை ஒருமுகப்படுத்தியவனாக மாயத்தின் மீதான தனது வலையை விரிக்கத் தொடங்கியிருந்தான். பலநூறு கண்கள் மணிக்கூண்டின் பிரம்மாண்டத்தைக் கண்டபடி யிருந்தன. சுபத்ரா தொலைவைப் பார்த்தபடியிருந்தாள். அவன் தனது மாயத்தால் மணிக்கூண்டினை மறையச் செய்ய முயன்ற வனாக இருந்தபோது பேரோசையுடன் மணி அடித்தது. யாவரும் கவனம் கூடியவர்களாக அண்ணாந்து பார்த்துக் கொண்டே இருந்தார்கள். மெல்லிய மயக்கமூட்டும் மனோகதி கூடியபோது அந்த மணிக்கூண்டு மறையவேயில்லை. வெயில் ஏறத் தொடங்கி பளீரென வெளிச்சம் நிரம்பிக்கொண்டிருந்தது. அவன் தனது தோல்வியின் கசப்பை அருந்தத் தொடங்கியவனாக இருந்தான். பகலேறி யாவும் ஒளிர, அவன் கைகள் காற்றில் எதையோ வரைந்துகொண்டிருந்தன. மணிக்கூண்டு மறையவே யில்லை. ஏமாற்றமுற்ற வயதானவர்கள் கலைந்துபோகத் தொடங்கி இருந்தார்கள். அவமதிப்பும் பரிகாசமும் சிதறிப் போன இடத்தில் அவன் நின்றுகொண்டிருந்தான். இனியும் கூட அவனால் மணிக்கூண்டை மறையச் செய்ய முடியுமென்று காத்திருந்த சிறுவர்களின் அருகாமைக்கு வந்த அவன் அவர்களின்

கண்களில் ஒளிந்துள்ள ஆசையைக் கண்டு தயக்கமானவனாகச் சுபத்ராவை நோக்கி நடந்தான். அவன் பின்னாடி நடந்து வரும் சிறுவர்கள் அவனைப் போலவே மணிக்கூண்டை நோக்கிக் கைவிரல்களால் கோலமிட்டு மறையச் செய்து கொண்டிருந்தார்கள். சுபத்ரா எதையும் பேசிக்கொள்ளவில்லை. அவள் எழுந்துகொண்டாள். அவனாகவே கேட்டான்,

'வீட்டுக்குப் போகலாமா?'

சிறுவர்கள் அவர்கள் நடந்து போகும் பாதையிலே பின்தொடர்ந்து வந்தார்கள். அது மிகவும் அவனைத் துன்புறுத்துவது போலவே இருந்தது. சுபத்ராவின் கைகளைப் பற்றிக் கொண்டான். சுபத்ரா ஏனோ பின்திரும்பி அந்தச் சிறுவர்களை அழைத்தாள். அவர்கள் வேகமாக ஓடிவந்தனர். தன்னிடமிருந்த மிட்டாய்கள் சிலவற்றை அவர்களிடம் தந்தவளாக வீடு திரும்பச் சொன்னாள். மிகவும் வருத்தம் தோய்ந்த குரலில் அவனாகவே சொன்னான்,

'எனது மனம் ஒருமை கூட மறுத்து சிதறிக்கொண்டேயிருக்கிறது.'

அவர்கள் நடந்து வரும்போது தெருக் குழாயில் குளித்துக் கொண்டிருந்த பிச்சைக்காரர்களில் ஒருவன் அவர்களைப் பார்த்துச் சிரித்தபடி தண்ணீரைப் பல் இடுக்கு வழியாகக் காற்றில் உமிழ்ந்தான். துக்கத்தைத் தனக்குள் விழுங்கியபடியே அவன் வீடு திரும்பினான். சுபத்ரா மட்டும் மூன்று நாள்கள் அழுது கொண்டிருந்தாள். அது சமாதானத்தால் ஆறுதல் அடையக் கூடியதல்ல என்பதை அவனும் உணர்ந்திருந்தான்.

★★★

ஐந்து மாதங்களுக்குப் பிறகான ஒரு கோடையின் உக்கிர நாளில் சுபத்ராவுக்கு ஆண் குழந்தை பிறந்திருந்தது. அது அடர்த்தியான கேசத்தோடு, பளிங்கு நிறமான கண்களைக் கொண்டிருந்தது. அந்தக் குழந்தையின் கை கால்கள் காற்றில் எதையோ உதைத்தபடியிருந்தன. சிசு உலகினை ஆச்சரியம் தீராமல் கண்டபடியிருந்தது. சுபத்ரா குழந்தையை அணைத்துக்கொண்டு படுத்துக் கிடந்தாள். செவிலி அவளிடம் வந்து சொல்லிப் போனாள், 'பிறந்ததிலிருந்து இந்தக் குழந்தை அழவேயில்லை. ஒரேயொரு முறை அழுதால் மட்டுமே குழந்தை பிழைக்கக் கூடும். அழுகிறதா எனப் பார்த்துக்கொண்டேயிருங்கள்.'

பிறந்த குழந்தையை அழச் செய்வதற்கு உரிய வழியை எவரும் அறிந்திருக்கவேயில்லை. புத்த பிரதிமைகளை நினைவூட்டும் சாயல் கொண்ட அந்த முகத்தில் அழுகையின் ரேகை ஓடவே யில்லை. சுபத்ராவின் கண்களில் வேதனை ததும்பிக்கொண்டி ருந்தது. அவள் குழந்தையின் கேசத்தை வருடியவளாகப் பார்த்துக்கொண்டே இருந்தாள். குழந்தையின் கைகள் எதையோ பற்றிட முனைந்தபடியிருந்தன. அவன் குழந்தையின் விரலைப் பற்றியவனாகத் தனது அடிக்குரலில் சொன்னான்,

'அழுகையை வரச்செய்வது எளிதானதல்ல.' இதைக் கேட்டதும் அவள் விம்மினாள்.

'ஒரேயொரு முறை உதட்டைச் சுழித்துவிடக் கூடாதா..?'

சிசு தன் உடலை முறித்தபடி கனவில் எவரோடோ விளையாடிக் கொண்டிருந்தது. உறக்கம் யாவரையும் பற்றிக்கொள்ளத் தொடங் கிய நெடிய இரவில் அவர்கள் இருவரும் விழித்துக்கொண்டிருந் தார்கள். அவள் எதையோ உளறுபவளாகச் சொன்னாள்,

'உங்களாலும் அழுகையை வரச்செய்ய முடியாதா? எறும்பு ஊர்வதைப் போல அழுகை மிக மெதுவாக எங்கிருந்தாவது ஓடி வந்துவிடாதா?'

அவர்கள் இருவரும் உறங்கும் குழந்தையைப் பார்த்தபடி இருந்தார்கள். அது தன் முகபாவத்தைக் கலைப்பதும் கூட்டு வதுமாக இருந்தது.

தன் உடலின் வெம்மையை அதைச் சுற்றிப் படர விட்டவளாக அதன் முகத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அசப்பில் தகப்பனையே கொண்டிருந்தது. உன்னிப்பாகப் பார்க்கப் பார்க்க அவனேதான் என்பது போல இருந்தது. அவன் சுபாவமே அந்தக் குழந்தையைப் பற்றிக்கொண்டு விட்டதோ. இரவில் அவள் மிகக் கோபமாகிக் கத்தினாள்.

'முடியுமானால் உங்கள் மாயத்தால் என்னை ஒரு பொம்மை யாக்கி விடுங்கள். எதையும் காண வேண்டியது இருக்காது. இல்லையென்றால் வீட்டில் உள்ள மாயப் பொருள்களை நானே தீ வைத்து எரித்துவிடப் போகிறேன்.'

அவன் அவளுக்குப் பதில் தராமல் குழந்தையைப் பார்த்தபடி இருந்தான். அவள் குழந்தையை அணைத்தவளாகச் சொன்னாள்,

‘அழு... ஒரேயொரு முறை நீ அழுதுவிடு. பிறகு உன் சிரிப்பை நான் கலைக்கவே மாட்டேன்.’

குழந்தை அவள் தொடுதலால் விழித்துக்கொண்டது. அதன் உடலை முறுக்கி அது புரண்டது. அவள் அதன் கண்களைப் பார்த் தாள். துல்லியமான சிரிப்பின் ரேகைகள் ஒளிந்த நீர்மை வெளி. அவள் தனது வலிய உதட்டால் முத்தமிட்டபடிச் சொன்னாள்,

‘அழு... அழு.. உதட்டைச் சுழி...’

எதையோ மறந்துபோய் நினைவு கொண்டதைப் போலக் குழந்தை திரும்பவும் உறக்கத்துக்குள் ஆழ்ந்துவிட்டது. அவள் தனது கைகளால் அந்தக் குழந்தையின் உடலை நெருக்கமாக அணைத்தபடிக் கத்தினாள்,

‘உங்கள் மாயத்தால் இந்தக் குழந்தையை ஒரு முறை அழச்செய்துவிட முடியாதா?’

அவன் குழந்தையின் சிரிக்கும் கண்களைக் கண்டபோது ஏற்படும் வேதனை தாளாமல் வெளியே திரும்பிக்கொண்டான். ஒரு பகல் இரண்டு இரவு வரை அந்தச் சிரிப்பு நீண்டிருந்தது. மறு பகலில் சுபத்ரா படுக்கையில் கால்களைச் சுருட்டிக்கொண்டு கேசம் கலைய வீழ்ந்து கிடந்தாள். அவன் அருகாமையில் இருந்த நீள விரிப்பைக் கண்டான். அதில் குழந்தையில்லை. வெண்ணிறத் துணிகள் மட்டுமே அடுக்கப்பட்டிருந்தன. அவன் கேசத்தைத் தொட்டதும் அவள் பெருங்குரலில் கத்தியபடி அழத் தொடங்கினாள்.

‘குழந்தை அழவேயில்லை. சிரித்துக்கொண்டேயிருந்தான். விடிகாலையில் அழுவதைப் போல முகத்தை ஒருமித்து வலிப்பு காட்டினான். அழுகை திரண்டுகொண்டு வந்தது. பின் அது கலைந்து மெல்லிய சிரிப்பாகி மறைந்துபோனது.’

அவனால் துக்கத்தைத் தாங்க முடியவில்லை. அவளது தோளைப் பற்றிக் கொண்டான். அவள் மிகவும் துவண்டுபோயிருந்தாள். தனது சிசு காற்றில் விரல்களால் எதையோ பற்றிட முனைந்த அந்தக் காட்சி இன்றும் தன் எதிரிலேயே உறைந்து போனதைப் போலவே இருந்தாள். சுபத்ராவின் நினைவுகளைக் குளிர்காலம் புகையச் செய்துவிடுகிறது.

★★★

மூசா கடையைத் திறந்த பெண்ணை அவன் இப்போதுதான் பார்க்கிறான். அந்தப் பெண் முப்பதுக்கும் மேற்பட்ட வயதுடையவளாக இருந்தாள். அகன்ற முகமிருந்தது. அவள் அவனை அறிந்தவளைப் போல சிரித்துக்கொண்டே கேட்டாள்,

'புதிதாக ஒரு ஹாலோ லைட் வந்திருக்கிறது. வாங்கிக் கொள்கிறீர்களா?'

உள்ளிருந்து ஒரு நபரின் குரல் கேட்டது.

'யார் வந்திருக்கிறது?'

'ஸ்கூலில் மேஜிக் செய்யும் ஆள்...'

அவள் திரும்பவும் கேட்டாள்.

'உங்களுக்கு என்ன வேண்டும்?'

'மேஜிக் பொருள்களை விற்க வந்திருக்கிறேன்.'

தனது மேஜிக் உடையையும் நாலைந்து மரப்பெட்டிகளையும் எடுத்துக் காட்டினான். அந்தப் பெண் ஒவ்வொரு பொருளாக எடுத்துக்கொண்டு போய் அவரிடம் காட்டிவிட்டு, ஒரு காகிதத்தில் பணத்தைக் குறித்துக்கொண்டு வந்தாள். மேஜிக்காரனின் ஆடைகளையும் தொப்பிகளையும் எடுத்துப் பார்த்தாள். பழையதாகவும் மெலிவான மனிதனின் ஆடைகளாகவுமிருந்தன.

'இந்த டிரஸ் வேணாம். பாக்கிப் பொருளுக்கு 600 ரூபாய் வாங்கிக்கோ' என உள்ளிருந்து குரல் கேட்டது. அவள் கறுப்பு மேல் கோட்டை எடுத்து உதறிப் பார்த்தாள். அதனுள் ஏதோ நாணயம் குலுங்கும் ஓசை கேட்டது. அவள் அந்த உடையினுள் ஏதேனும் ரகசியப் பையிருக்கிறதா எனத் தேடியவளாக உதறினாள். வெள்ளி நாணயம் மோதிக் குலுங்கும் ஓசை மட்டும் கேட்டது. ஆனால் மேல் கோட்டினுள் நாணயம் தென்படவில்லை. அவள் உள்ளே இருந்த வயதானவரிடம் அதைக் காட்டினாள். அவரும் தனது பலமான கைகளால் விரித்து உதறினார். நூற்றுக்கணக்கான வெள்ளி நாணயங்கள் உருண்டோடும் ஓசை கேட்டது. நாணயம் எதுவும் தென்படவில்லை. குனிந்து இருவரும் பார்த்தனர். அந்தப் பெண் கேட்டாள்,

'வெள்ளிக் காசு குலுங்குகிற சப்தம்... உள்ளே ரகசியமா ஏதாவது நாணயம் ஒளிச்சு வெச்சிருக்கியா?'

அவன் இல்லையெனச் சொல்லியவனாக கோட்டை, கைகளில் எடுத்துப் பார்த்தான். அவன் குலுக்கியபோதும் அதிலிருந்து வெள்ளி நாணயங்கள் உரசிக்கொள்ளும் ஓசை கேட்டது. அவன் அதைத் தலைகீழாகக் கவிழ்த்துப் பார்த்தான். அதில் எதுவுமே யில்லை. ஒவ்வொரு பையாகக் கையை நுழைத்துப் பார்த்தான். அதில் எதுவுமேயில்லை. ஆனால் உதறும்போது அதில் வெள்ளியோசை கேட்கிறது. அந்தப் பெண் சிரித்தபடியே சொன்னாள்,

‘எங்க தாத்தா கூட கைதட்டினா கோயில் மணிச் சப்தம் வரும். அது ஒரு டிரிக். இது என்ன மேஜிக்..?’ அவன் எரிச்சலுற்றவனாகச் சொன்னான்.

‘இது மேஜிக் இல்ல... பிரம்மை...’

அந்தக் கறுப்புக் கோட்டை விலைக்கு வாங்கிக்கொள்ள பெண் மிக ஆசைப்பட்டாள். ஆனால் அவன் மறுத்தபடி அவள் எண்ணிக் கொடுத்த ரூபாய்களை வாங்கிக்கொண்டவனாக அந்த உடையைக் கையில் சுருட்டிக்கொண்டு தெருவில் இறங்கி நடக்க ஆரம்பித்தான். மருத்துவமனைக்குப் போகும் அவசரத்தில் குறுகலான சந்துகளின் வழியே நடந்து வந்தான். தொலைவில் மணிக்கூண்டில் காலை மணி 11 அடித்தது. அவன் தனது கையில் சுருட்டிய கறுப்பு கோட்டை உதறியபடி வேகமாக நடந்தபோது அதிலிருந்து நாணயங்கள் சிதறிப்போகும் சப்தம் கேட்டுப் பிச்சைக்காரர்கள் சிலர் ஓடி வந்தனர். நடைபாதையில் நாணயம் உருண்டு ஓடும் ஓசை கேட்டது. மணிக்கூண்டின் முன் உள்ள சிறிய நீரூற்று பொங்கிக்கொண்டிருந்தது. ஏதோ வெறி கொண்டவனைப் போல அந்த மேல் கோட்டை காற்றில் அங்கு மிங்குமாகச் சுழற்றி வீசினான். அவர்கள் பார்த்துக்கொண்டி ருக்கும்போதே நீரூற்று மெல்ல மறையத் தொடங்கி சில நிமிஷங்களில் மணிக்கூண்டும் அந்த வீதியிலிருந்த கட்டடங் களும் மறைந்து வெட்ட வெளியானதை நடைபாதை வாசிகள் பலரும் வியப்பு மீறிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். நீண்ட நாள்களுக்குப் பிறகு கண்ணில் நீர் துளிக்க அழுதபடி அவன் அவசரமாக மருத்துவமனையை நோக்கி நடந்துகொண்டி ருந்தான்.